# பாகம் – 2

## ருத்ராட்சம் மகிமை

ருத்ராட்சம்த்தின் மகிமையை விளக்குகிறது இந்தப் புராணக் கதை.முன்னொரு காலத்தில் சார்வாங்கன் என்பவன் தன் கடமைகளை மறந்து, தான் செய்த வியாபாரத்தில் பல தவறுகள் புரிந்து, கூடா ஒழுக்கம் கொண்டு வாழ்ந்து வந்தான். ஒரு கட்டத்தில் குடும்பத்தை விட்டுப் பிரிந்து களவுத் தொழிலிலும் ஈடுபட்டான்.

இறுதியாக விந்திய மலைச் சாரலில் உயிர் துறந்தான். அவனை யமகிங்கரர்கள் பாசக்கயிற்றால் பற்றி இழுத்து யமலோகத்திற்குக் கொண்டு செல்ல முற்பட்டபோது, சிவகணங்கள் அவர்களைத் தடுத்தனர். 'இவ்வுயிரை கைலாயத்துக்கு எடுத்துச் செல்லப் போகிறோம்' என்றனர். ஆனால், யமனின் தூதுவர்களோ 'இவன் மகாபாவி' என்றனர். அதற்கு சிவகணங்கள், 'இவன் வாழ்ந்த முறை ஒழுங்கீனமானதாக இருக்கலாம்.

ஆனால், இவன் இறந்த இடத்திலிருந்து பத்து முழ தொலைவில் ஒரு ருத்ராட்சம் மரம் உள்ளது. அந்த மரத்தின் அதிர்வலைகள் இவனை புண்ணியவனாக்கிவிட்டது. எனவே, இவனுக்கு சிவலோகப் பதவி கிட்டியது' என்றனர். ருத்ராட்சம்த்திற்கு அவ்வளவு சிறப்பு உண்டு!

## ருத்ராட்சம் தோன்றியது எப்படி

ருத்திரன் என்ற பெயரில் இருந்து வந்ததே ருத்ராட்சம் ஆகும்.



சிவபெருமானின் முக்கண்களிலிருந்தும் தெறித்த கண்ணீர் சொட்டுகளே ருத்ராட்சம்ங்களாகின. மொத்தம் முப்பத்தெட்டு விதமான ருத்ராட்சம்ங்கள் தோன்றின.

வலது கண்ணிலிருந்து மஞ்சள் நிற ருத்ராட்சம்ங்கள் பன்னிரண்டும், இடது கண்ணில் இருந்து பதினாறு வெண்ணிற ருத்ராட்சம்ங்களும் தோன்றின. நெற்றிக் கண்ணிலிருந்து கருப்பு வண்ணத்தில் பத்து ருத்ராட்சம்ங்கள் வெளிப்பட்டன.

## ருத்ராட்சம் தோற்றம் எப்படி இருக்கும்



ஒரு முகம் முதல் 21 முகம் வரை கொண்ட ருத்ராட்சம்ங்கள் உண்டு. ருத்ராட்சம்த்தின் மேல் உள்ள கோட்டின் எண்ணிக்கையைக் கொண்டு ருத்ராட்சம் எத்தனை முகம் கொண்டது என்பதை அறியலாம்.



சாணைக்கல்லில் உரைத்தால் மஞ்சளாக தங்கம்போல் பிரகாசிப்பதும், நல்ல வர்ணமுள்ளதுமான ருத்ராட்சம், தண்ணீரில் போட்டால் மூழ்குவதும், இரு செப்புத் தகட்டுக்கு இடையில் வைத்து சோதனை செய்தால் சுற்றக்கூடியது மான ருத்ராட்சம் ஆகியவை மிகவும் விசேஷமானவை.கழுத்தில் மாலையாக 32 ருத்ராட்சம்ங்களும், கை மணிக்கட்டுகளில் 12 ருத்ராட்சம்ங்களும், மேல் கையில் பதினாறும், மார்பில் நூற்றியெட்டும் தரிக்கலாம்.

ருத்ராட்சம் மாலையின் பெருமை என்று சொன்னால், ஏக முக ருத்ராட்சம்த்தின் அதி தேவதையாக தத் பரமசிவனைக் கூறுவார்கள். இந்த ஏக முக ருத்ராட்சம்த்தை அணிவதால் சிவபெருமான் ப்ரீத்தி அடைந்து பிரம்மஹத்தி தோஷம் விலகும்.

இரண்டு முக ருத்ராட்சம்த்தின் அதிதேவதை ஸ்ரீகண்ட பரமசிவம். இந்த இரண்டு முக ருத்ராட்சம்த்தை அணிவதால் சிவசக்தி ப்ரீதி ஏற்பட்டு பசுவைக் கொன்ற தோஷம் விலகும்.

மூன்று முக ருத்ராட்சம்த்தின் அதிதேவதை அக்னி தேவனாகும். இதை அணிவதால் மும்மூர்த்திகளும் சந்தோஷம் அடைகிறார்கள். ஸ்திரீகளுக்குச் செய்த தோஷம் விலகும்.

நான்கு முக ருத்ராட்சம்த்தின் அதிதேவதை பிரம்மாவாகும். இதை அணிவதால் பிரம்மா ப்ரீதி அடைவதுடன், மனிதர்களுக்கு இழைத்த பாவம் விலகும்.

ஐந்து முக ருத்ராட்சம்த்தின் அதிதேவதை காலாக்னி ருத்ரன். இதை அணிவதால் சதாசிவம் சந்தோஷம் அடைகிறார். செய்யக்கூடாத செயல் களைச் செய்வதால் உண்டாகும் தோஷம் விலகும்.

ஆறு முக ருத்ராட்சம்த்தின் அதிதேவதை சுப்ரமணியராகும். இதை அணிவதால் ஆறுமுகன் சந்தோஷம் அடைவதுடன், பிரம்மஹத்தி தோஷம் விலகும்.

ஏழு முக ருத்ராட்சம்த்தின் அதிதேவதையாக ஆதிசேஷன் சொல்லப்படுகிறது. இதை அணிவதால் சப்தமாதர்கள் சந்தோஷம் அடைவதுடன் களவு தோஷமும் கோபத் தீயும் விலகும்.

எட்டு முக ருத்ராட்சம்த்தின் அதிதேவதை விநாயகப் பெருமானாகச் சொல்லப்படுகிறது. இதை அணிவதால் அட்டவித்யேச்வரர் சந்தோஷம் அடைவதுடன், செய்யக்கூடாத பாவங்களைச் செய்த தோஷம் விலகுகிறது.

ஒன்பது முக ருத்திராட் சத்தின் அதிதேவதை பைரவர். இதை அணிவதால் நவதீர்த்தங் களில் குளித்தால் என்ன புண்ணியமோ அந்தப் புண்ணியம் கிட்டும்; பைசாச உபாதைகளும் துஷ்டப் பிரயோகங்களும் விலகும்.

பத்து முக ருத்ராட்சம்த் தின் அதிதேவதை விஷ்ணு. இதை அணிவதால் அஷ்டதிக் பாலகர்களும் சந்தோஷம் அடைவதாகச் சொல்லப்பட்டுள்ளது. ஜோதிடத் தில் வரும் நாக தோஷமும்; பூத- பிரேத- பைசாச தோஷங் களும் விலகும்.

பதினோரு முக ருத்திராட் சத்தின் அதிதேவதை பதினோரு ருத்ரர்களாகச் சொல்லப்பட்டுள் ளது. இதை அணிவதால் 11 ருத்திரர்களும் ப்ரீதி அடைகிறார்கள். பல அஸ்வமேத யாகம் செய்த பலன் களும் பல வாஜபேய யாகம் செய்த பலனும் கிட்டும்.

ருத்ராட்சம் அணிவதால் அனைத்து நற்குணங்களும், அவர்களால் பிறர் அனைவரும் பயன்பெறும் வகையிலும் நன்மைகளும் அமையும்.

ருத்ராட்சம் தாம் அணியாவிட்டாலும், அப்படி ருத்ராட்சம் அணிந்தவருக்கு அன்னமளிப்பவர்களும், ருத்ராட்சம்மரத்தைப் பராமரிக்கிறவர்களும், புதிய ருத்ராட்சம்த்தை தானம் செய்பவர்களும், சிவபெருமானுக்கு ருத்ராட்சம் ஆபரணம் அணிவிப்பவர்களும் பல சிறப்பு நலன்களைப் பெற்று வாழ்வாங்கு வாழ்வார்கள். ருத்ராட்சம்த்தால் ஜபம் செய்கிறவருக்கு அனைத்து மந்திர சித்திகளும் எளிதில் கைவரப்பெறும்.

ஒரு முக ருத்ராட்சம் முதல் பதினாறு முகம் ருத்ராட்சம் வரை அணிவதன் மூலம் பல பலன்களை அடையலாம். ருத்ராக்ஷத்திற்கு என சில இயல்பு குணங்கள் உண்டு. சக்தியூட்டப்பட்ட ருத்ராட்சம் அணிந்திருப்பவர்களை மிருகம் மற்றும் விஷ ஜந்துக்கள் தீண்டாது என்பது அறிவியலுக்கு அப்பாற்பட்ட உண்மை. இதனால்தான் காடுகளில் தவம்செய்ய செல்லும் ரிஷிகள் தங்களின் உடல் முழுவதும் ருத்ராக்ஷத்தை அணிந்தார்கள்.

ருத்ராட்சம் என்பது நமக்கு நிகரான ஓர் உயிரின் வடிவம் என அறிந்து கொள்வது அவசியம்.நீங்கள் ருத்ராக்ஷத்தை தொடர்ந்து அணிபவராக இருந்தால் உங்களுக்கு ஏற்படும் சுக-துக்கங்களின் வெளிப்பாடு ருத்ராக்ஷத்திலும் தெரியும். உங்களின் உடலில் அதிகமான உடலுக்கு ஒத்துக்கொள்ளாத வேதிப்பொருட்கள் இருந்தால் ருத்ராட்சம் தனது இயல்பு நிறத்தை மற்றிக்கொள்ளும். விஷபொருட்கள் உடலில் கலந்தால் ருத்ராட்சம் அந்த விஷப்பொருட்களைப் பிரித்தெடுத்து தனது வாழ்க்கையை முடித்துக்கொள்ளும்.

ருத்ராட்சம் பயன்படுத்த எந்த ஒரு கட்டுப்பாடும் இல்லை. குறிப்பிட்ட ஜாதி, மத, இன வேறுபாடு கிடையாது. ஆண்/பெண் என இருவரும் பயன்படுத்தலாம். வயது மற்றும் இதர விசயங்கள் தடையாக இருக்காது. ஆனால் ஒழுக்கமும் தூய்மையும் ருத்ராக்ஷத்திற்கு முக்கியமான ஒன்று.

தூய்மையற்ற நிலையிலும் ஒழுக்கமற்ற நிலையிலும் பயன்படுத்தும் பொழுது ருத்ராக்ஷத்தின் இயல்பு நிலையான தன்மை பாதிக்கப்படுகிறது. மேலும் தெய்வீகமான ஓர் பொருளை எவ்வாறு பாதுகாப்போமோ அதற்குண்டான மரியாதை செலுத்துவது நல்லது.குரு தீக்ஷை பெற்றவர்கள் தினமும் ஜெபம் செய்த பிறகு ருத்ராக்ஷ மாலையை கழுத்தில் அணிவது நல்லது.ஜெபிக்கப்பட்ட மந்திரமானது ருத்ரக்ஷ மாலையில் தொடர்ந்து அதிர்வுகளை உண்டு பண்ணி அன்று முழுவதும் அவர்களை ஆனந்திக்கச் செய்யும்.

மந்திர ஜெபம் செய்யாதவர்கள் கூட ஆன்மீக ஆற்றல் வாய்ந்தவர்களிடத்தில் பிரசாதமாக வாங்கி அணிந்து கொள்ளலாம். இதை தவிர வேறு தன்மையில் ருத்ராட்சம் அணிந்தால் அது ஓர் சாதாரண அணிகலனுக்குச் சமமானது. வேரு விசேஷம் அதில் இல்லை.

ருத்ராக்ஷ மாலையை பயன்படுத்தும் பொழுது நன்றாக பாதுகாப்பது முக்கியமான ஒன்று. கெமிக்கல் பொருட்கள், சோப் மற்றும் இதர செயற்கைப் பொருட்கள் படாமல் பாதுகாக்க வேண்டும்.

பயன்படுத்த துவங்குவதற்கு முன்னால் ஒரு வார காலம் பசு நெய் அல்லது நல்லெண்ணையில் ஊறவைக்க வேண்டும். பின்பு நீரால் கழுவி ஈரம் போக துடைத்து விட்டு திருநீறில் ஒரு நாள் முழுவதும் வைக்கவேண்டும். பின்பு காய்ச்சாத பசும்பாலில் கழுவி நீரில் முக்கி எடுத்து நன்றாக துடைத்துக் கொள்ளவும். பின்பு பூஜையில் வைத்து ஜெபங்கள் செய்து அணியலாம். இந்த தூய்மையாக்கும் முறையை வருடத்திற்கு ஒரு முறை செய்ய வேண்டும். மாத சிவராத்திரி அல்லது மஹாசிவராத்திரி அன்று அணியுமாறு தூய்மை வேலையை துவக்க வேண்டும்.

ருத்ரக்ஷத்தை தூய்மை செய்ய இத்தனை வேலை செய்ய வேண்டுமா என்ற மனநிலை ஏற்படுகிறதா இதை செய்ய வேண்டிய அவசியத்தை நிதர்சனமான விஷயத்திலிருந்து பார்ப்போம். உங்கள் உடலில் மேல்தோல் முழுவதும் இல்லாமல்

வெறும் சதைப்பகுதி மட்டும் வெளியே தெரிந்தால் உங்கள் உடல் எவ்வளவு உணர்வு மயமாக இருக்கும். இதற்கு ஒப்பானது ருத்ராக்ஷத்தின் உணர்வு நிலை. அதனால் தான் மேற்பகுதியை கடினமாக்கவும், உணர்வு மிகாமல் சரியான நிலையை அடைய இயற்கையான பொருள் மூலம் சுத்திகரிக்க முயல்கிறோம்.

ருத்ராக்ஷ மணிகளில் பல வகைகள் உண்டு. ஒன்று முதல் பதினான்கு முகங்கள் வரை ருத்ராக்ஷ மணிகள் கிடைக்கிறது. முகம் என்பது ருத்ரக்ஷ மணிகள் மேல் உள்ள செங்குத்தான கோடுகள் ஆகும். ஆரஞ்சு பழத்தை தோல் உரித்தால் உள் பகுதியில் ஒவ்வொரு சுளைக்கும் இடையே தெரிவது போல உள்ள பகுதியை முகம் என அழைக்கிறார்கள். ஒவ்வொரு முக தன்மைக்கு ஏற்ப ருத்ராட்சம் ஆற்றலை வேறுபடுத்துகிறது என்றும் அதன்மூலம் கிடைக்கும் பலன்கள் வேறுபடுகிறது என்றும் கூறுகிறார்கள். உண்மையில் ருத்ராக்ஷத்திற்கு பலன் தருவது, செல்வம் கொடுப்பது போன்ற செயல் கிடையாது.நவரத்தின கல் போல இதனையும் வியாபாரமாக்கும் யுக்தியே இந்த பிரச்சாரம்.

ருத்ரக்ஷத்தை தங்கம், தாமிரம் அல்லது பருத்தி நூலில் மாலையாக அணிவது நல்லது. நூலில் அணியும் பொழுது மட்டும் நெருக்கமாக கோர்த்து அணிய வேண்டும். ருத்ரக்ஷ வடிவங்களுக்கு என்று சில முக்கிய செயல்கள் உண்டு. இந்த ஒவ்வொரு வகையான ருத்ரக்ஷமும் அடிப்படையில் ஒன்றான செயல்களை செய்தாலும், சில பிரத்யேக காரணங்களுக்கும் பயன்படுத்தலாம்.

1. ஐந்து முக ருத்ராக்ஷத்தை மட்டுமே (கிரஹஸ்தர்கள்) குடும்ப வாழ்க்கையில் உள்ளவர்கள் பயன்படுத்தலாம்.

2. ஏக முக என அழைக்கப்படும் ஒருமுக ருத்ராட்சம் சன்யாசிகள் மட்டுமே அணியவேண்டும். பிறர் வீட்டில் உள்ள சாலிக்ராமம் மற்றும் விக்ரஹம் போல வைத்து பூஜை செய்யலாம்.

3. நான்கு முக ருத்ராக்ஷத்தை பயன்படுத்தினால் கலை நயம், சங்கீத ஞானம் போன்ற கலையாற்றல் வளரும். குழந்தை பிறப்பு இல்லாமல் சிரமப்படுபவர்களுக்கு நான்கு முக ருத்ராக்ஷத்தை பயன்படுத்துவதால் தடை நீங்க வாய்ப்பு உண்டு.

4. துடிப்பு இல்லாமல் சோர்வுடன் இருக்கும் பன்னிரெண்டு வயதுக்கு உட்பட்ட குழந்தைகளுக்கு ஆறுமுக (ஷண்முகி) ருத்ராட்சம் நல்ல பலனை அளிக்கும்.

5. மணவாழ்க்கையில் வாழ்க்கைத் துணைவருடன் பிரிவு உள்ளவர்கள் கௌரி சங்கர் என்ற ருத்ராட்ச வகையை அணிந்தால் மண வாழ்க்கையில் முன்னேற்றம் உண்டு.

தனியாக ஒரே ஒரு ருத்ராட்சம் அணிவதை விட மணிமாலையாக அணிவது நல்லது. பஞ்சமுக ருத்ராக்ஷத்தை தவிர வேறு வகையான ருத்ராட்சம் அரிது. எனவே நமது பஞ்ச ப்ராணன்களில் சக்தி நிலை மேம்பட 108 மணிகள் கொண்ட ஐந்துமுக ருத்ராக்ஷத்தை அணிந்தால் அனைத்து மேம்பாட்டையும் பெறலாம்.



ருத்ராக்ஷத்தில் போலியான மணிகள் வருவதுண்டு. இதை எவ்வாறு கண்டறிவது என குழப்பம் அனைவருக்கும் உண்டு. ருத்ராட்சம் தனக்கெனசில தனித் தன்மைகளைக் கொண்டது. தாவர வகையாக இருந்தாலும் நீரில் மூழ்கிவிடும். மரவகைகள் நீரில் மிதப்பதைப் போல மிதக்காது. ருத்ராக்ஷத்தில் செயற்கையாக எதையும் இணைக்க முடியாது.

ருத்ராக்ஷ மணியின் துளைகளுக்கு அருகே செப்பு நாணயங்களை வைத்தால் ருத்ராட்சம் காந்தப்புலம் விலகுவதை போல வேறு திசைக்கு மாற்றமடையும். ருத்ராட்சம் போன்ற உருவத்தில் இருக்கும் சில மரவகைகள் உண்டு. இதை" பத்ராட்சம் " என அழைப்பார்கள். இதில் சாயத்தைக் கொடுத்து ருத்ராட்சம் போல விற்பனை செய்வார்கள். தகுந்த பரிசோதனைக்குப் பிறகு வாங்குவது நல்லது.

ஜோதிட ரீதியாக ருத்ராட்சம் பயன்படுமா என்றால் முடியும் என்றே கூறலாம். ஒருமுக ருத்ராட்சம் முதல் அதன் வரிசைகிரமமாக உள்ள முக அமைப்புகள் சூரியன் முதல் சனி வரை உள்ள வானியல் அடிப்படையான கிரக வரிசைக்கு சமமானவை. எந்த கிரகத்தின் ஆற்றல் தேவையோ அந்த கிரகத்தின் அமைப்பு கொண்ட ருத்ராக்ஷத்தில் கிரகத்தின் மூலமந்திரத்தை ஜெபம் செய்து அணியலாம்.

ருத்ராக்ஷத்தை பல லட்ச ரூபாய் விலையில் விற்கவும் வாங்கவும் ஆட்கள் தயாராக இருக்கிறார்கள். பத்திரிகையிலும், தொலைக்காட்சிகளிலும் விளம்பரம் செய்கிறார்கள். பல கோடி ரூபாய் செல்வம் சேர ருத்ராட்சம் அணியுங்கள் என பிரச்சாரம் செய்கிறார்கள். எனக்கு தெரிந்தவரை எந்த ஒரு உடல் முழுவதும் ருத்ராட்சம் அணியும் எந்த சிவனடியாரும் கோடிஸ்வரராக இருந்து பார்த்ததில்லை. பிறருக்கு கோடிகளை அளிக்கும் ருத்ராக்ஷத்தை விற்கும் வியாபாரி ஏன் கோடீஸ்வரன் ஆவதில்லை என சிந்தித்துப் பார்த்தால் நிதர்சனம் புரியும்.

ருத்ராக்ஷத்தைக் கொண்டு கோடீஸ்வரனாக முடியாது. ஆனால் அண்டத்தைப் படைத்த ஈஸ்வரனாக முடியும். லஷ்மியை அடைய முடியாவிட்டாலும் ஆன்ம லஷியத்தை அடையமுடியும். பிறப்பு இறப்பு அற்ற நிலையை அடையும் முக்தி எனும் விருட்சத்தை வளர்க்க ருத்ராட்சம் என்ற விதையை விதையுங்கள்.

இறந்த வீட்டிற்கு செல்லும் பொழுது சிலர் அணிய கூடாது என சொல்லுவார்கள். ருத்ராட்சம்த்தை காக்கும் கடவுளாக பார்க்க வேண்டும். எங்கெல்லாம் உங்கள் உடல்,மனம் மற்றும் ஆன்மா தவறான சக்திக்கு ஆட்படுமோ அங்கெல்லாம் அணியலாம்.

எப்பொழுதும் ஜபம் செய்த மாலையை கழுத்தில் அணிவது நல்லது. ஜபிக்கபட்ட மந்திரங்கள் அதில் நிறைந்திருக்கும். உங்கள் அலைபேசியில் சார்ஜ் செய்து விட்டு, வீட்டில் வைத்திருந்தால் என்ன பலன்?

ஜபம் செய்ததும் மாலையை அணிந்தால் அன்று வித்தியாசமான உள்ளுணர்வு இருப்பதை உணரலாம். முயற்சித்து பார்த்து விட்டு சொல்லுங்கள்.

ஆன்மீக குரு, ஆன்மீக வாழ்க்கை வாழ்பவர்கள் மூலம் மந்திர உபதேசம் பெற்று ஜபம் செய்ய துவங்கலாம். ஜபம் செய்யும் மந்திரம், மாலை அனைத்தும் அவர்களின் கருத்தாக இருக்கவேண்டும். நாம் முடிவு செய்ய கூடாது.



இரு முக ருத்ராட்சம் தம்பதிகளுக்கு நல்லது. அதைகாட்டிலும் கௌரிஷங்கர் எனும் வகை உண்டு. அது சிறப்பு வய்ந்தது.

"திருச்சிற்றம்பலம்"

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு.

